Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone; 420212 4 பக்கம் விலை 45 காசு



நன்னெறி

தாங்கிக் கொள்வது, தளராதிருப்பது, கண்ணியம் காப்பது இது தான் என் நெறி-நன்னெறி.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

நூலகம்

சுருங்கக் கூறுவதென்றால் நூலகத்தை ஒரு பல்கலைக் கழகமென்றே கூறலாம்.

- தந்தைபெரியார்



மலர்: 7 சென்னை: 24 - 8 - 1983 புதன் வெளியீடு: 25 - 8 - 1983 வியாழன் இதழ் 304

★ திரை மறைவில் இருந்து கருணாநிதி புகார் கூறுவதா? விசாரணை கமிஷன் முன் வந்து நிரூபிக்கட்டும்

★ தமிழக முதல்வர் மீது புகார் கூற அரசியலே காரணம்

★ மாணிக்கம் கோஷ்டி கிரிமினல் குற்றவாளிகளை போன்றோர்

★ மாஜி ஐ. ஜி. மாணிக்கத்தால் ஜோடிக்கப்பட்ட வழக்கு இது

★ சட்ட விரோத சதி செய்து சாட்சியம் தயாரித்தனர்

## விசாரணைக் கமிஷன் முன் விசாரணைக்கு

# முதல்வர் வரத் தேவையில்லை

## ஆதார சட்டக் குறிப்புகளை சுட்டிக்காட்டி வழக்கறிஞர் ராம்ஜெத்மலானி வாதம்

சென்னை, ஆக. 24- நீதிபதி ராமபிரசாத்ராவ் விசாரணைக் கமிஷன் முன் விசாரணைக்கு தமிழக முதல்வர் 'எம். ஜி. ஆர்.' வரத்தேவையில்லை என்று சுப்ரீம் கோர்ட் வழக்கறிஞர் ராம்ஜெத்மலானி வாதாடினார். தனது வாதத்துக்கு ஆதாரமாக பல சட்டக்குறிப்புகளையும், முன்னுதாரணங்களையும் அவர் சுட்டிக் காட்டினார்.

சாராய மொத்த வியாபாரம் மற்றும் பிளண்டிங் பாட்டலிங் ஆலைகளுக்கு லைசென்சு வழங்குவதில் முறைகேடுகள் நடந்துள்ளதாகவந்தபுகாரையொட்டி தமிழகஅரசுநியமித்துள்ள ராமபிரசாத்ராவ் கமிஷனின் விசாரணை தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

விசாரணைக்கமிஷன் முன்பு முதல்வர் புரட்சித் தலைவரையும் அமைச்சர் எஸ்.டி.எஸ்.சையும் வரவழைத்து குறுக்கு விசாரணை செய்ய நீதிபதி அனுமதி தரவேண்டும் என்று முன்னாள் ஐ. ஜி. மாணிக்கத்தின் வக்கீல் ஜி. ராமசாமி சார்பிலும், தி. மு. க. தலைவர் கருணாநிதியின் வக்கீல் நடராஜன் சார்பிலும் கோரிக்கை விடப்பட்டது.

நேற்று நடைபெற்ற விசாரணையின் போது முதல்வர் புரட்சித் தலைவரையும் அமைச்சர் எஸ். டி. எஸ்ஸையும் குறுக்கு விசாரணை செய்யவேண்டும் என்று கமிஷன் முன்பு நெல்லிக்குப்பம் கிருஷ்ணமூர்த்தி வாதிட்டார்.

புரட்சித்தலைவரின் வக்கீல் ராம்ஜெத்மலானி நேற்று வாதாடுகையில், "குறுக்கு விசாரணைக்கு முதல்வர் வரவேண்டிய அவசியமில்லை" என்று கூறி அதற்கு ஆதாரமாக பல சட்டக் குறிப்புக்களை நீதிபதிராமபிரசாத்ராவ் முன்பு படித்துக் காட்டினார்.

அவர் மேலும் கூறியதாவது:-

குற்றச்சாட்டை சொல்கிறவர்கள் யாராக இருந்தாலும் கமிஷன் முன்பு வந்து குற்றவாளி கூண்டில் ஏறி சாட்சி சொல்லி நிரூபிக்க வேண்டுமே தவிர திரை மறைவில்இருந்துகொண்டு குற்றச்சாட்டை சொல்லக் கூடாது.

முதல்வர் எம். ஜி. ஆர். மீது குற்றச்சாட்டுக்களை கூறும் கருணாநிதி ஆனாலும் சரி, கிருஷ்ணமூர்த்தி ஆனாலும் சரி கமிஷன் முன்பு வந்து அதை நிரூபிக்கவேண்டும்.

### திரை மறைவில் கருணாநிதி

ஆனால் கமிஷன் முன்பு வர கருணாநிதிக்குஉரிமை இல்லை. ஏனென்றால் அவர் பிரமாண வாக்கு மூலம் தாக்கல் செய்யவில்லை. எனவே தான் திரைக்கு பின்னால்இருந்து கொண்டிருக்கிறார்.

நீதிபதி அவர்களே, முதல்வரும் மற்ற அமைச்சர்களும் பிரமாண வாக்குமூலம் தாக்கல்செய்திருக்கிறார்கள். அந்த வாக்குமூலத்தில் பலவிளக்கங்களை அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். முதலில் முதல்வரின் பிரமாண வாக்குமூலத்தை நீதிபதி அவர்கள் படிக்க வேண்டும்.

சட்டப்படி ஒருவரின் பிரமாண வாக்குமூலத்தில் தரப்பட்டிருக்கின்ற விளக்கங்கள் திருப்தி அளிக்காவிட்டால் அவரை குறுக்கு விசாரணை செய்ய வரவழைக்கலாம். ஆனால் முதல்வர் எம். ஜி. ஆர். தன்னுடைய பிரமாண வாக்கு மூலத்தில் எல்லா விளக்கங்களையும் கூறியுள்ளார். நீதிபதி அவர்களுக்கு அந்தவிளக்கங்கள் திருப்தி தராவிட்டால் கமிஷன் முன்பு சாட்சியம் சொல்ல முதல்வரை அழைக்கலாம். பிரமாண வாக்கு மூலத்தில் கூறப்பட்டுள்ள விளக்கங்கள் திருப்தியாக அமைந்துவிட்டால் அவரை குறுக்கு விசாரணை செய்ய வேண்டிய அவசியமே இல்லை. சட்டமும் இதைத்தான் சொல்லுகிறது.

### முதல்வர் வர தேவையில்லை

நேருபிரதமராகஇருந்த போது அப்போதைய பஞ்சாப் மாநில முதல்வர் பிரதாப்சிங் கெய்ரோன் மீது விசாரணை கமிஷன் போடப்பட்டது.முதல்வர் சார்பில் பிரமாண வாக்கு மூலம் தாக்கல் செய்யப்பட்டது. அந்த வாக்கு மூலத்தில் கூறப்பட்டிருந்த விளக்கங்களை



வழக்கறிஞர் ராம்ஜெத்மலானி

படித்து பார்த்த நீதிபதி விசாரணைக்கு முதல்வர் வரத்தேவையில்லைஎன்று கூறிவிட்டார். பிரமாண வாக்குமூலத்தில் கூறப்பட்டுள்ளவைகளே போதுமென்று சொன்னார். (அந்த குறிப்புக்களை நீதிபதி ராமபிரசாத் ராவ் முன்பு ஜெத்மலானி படித்துக் காட்டினார்.)

அதேபோல் காஷ்மீர் மாநிலமுதல்வராகஇருந்த பக்ஷிகுலாம் அகமது மீது ஒரு கமிஷன் போடப்பட்டது. அந்த கமிஷனின்

2-ம் பக்கம் பார்க்க)

## பெங்களூர் மாநகராட்சி கூட்டம்

# கருஞ்சட்டை அணிந்துவந்து கழக உறுப்பினர்கள் பதவி ஏற்றனர்

பெங்களூர், ஆக. 24— கர்நாடக மாநிலத்தில் பெங்களூர் மாநகராட்சி உறுப்பினர்கள் கூட்டம் இன்று கூடியது.

மாநகராட்சி கழக உறுப்பினர்கள் கறுப்புச் சட்டை அணிந்து வந்து பதவி ஏற்றனர்.

பெங்களூர் மாநகராட்சி தேர்தல் முடிந்து வெற்றி பெற்ற உறுப்பினர்கள் இன்று பதவி ஏற்றனர்.

இலங்கையில் நடைபெற்ற தமிழர்கள் படுகொலைக்கு அனுதாபம் தெரிவிக்கும் வகையில் செப்டம்பர் 14 வரை கருப்புச்சட்டை அணியவேண்டும் என்று கழக செயற்குழு பொதுக்குழு கூட்டத்தில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டு இருப்பது தெரிந்ததே.

இதனை ஒட்டி பெங்களூர் மாநகராட்சி கழக உறுப்பினர்களும் இன்று கூட்டத்திற்கு கருப்புச் சட்டை அணிந்துவந்தனர்

பெங்களூர் மாநகராட்சியில் கழக சார்பில் 7 பேர் வெற்றிபெற்று இருக்கிறார்கள்.

இவர்கள் அனைவரும் கருப்புச்சட்டை அணிந்தபடி பதவிப் பிரமாணம் எடுத்துக் கொண்டனர்.

### மேயர் தேர்தல்

13 ஆண்டு இடைவெளிக்குப் பிறகு மாநகராட்சிக் கூட்டம் நடைபெற்றது.

இன்றைய கூட்டத்தில் மேயர், துணைமேயர் தேர்தல் நடைபெற்றது.

66 வயதான எஸ்.சுந்தரராஜ் புதிய மேயராக தேர்ந்து எடுக்கப்பட்டார் இவர் பெங்களூர் மாநகராட்சியில் முதல் ஜனதா மேயர் ஆகிறார்.

ஜனதாக்கட்சியைச் சேர்ந்த லலிதாராஜ் துணைமேயராக தேர்ந்து எடுக்கப்பட்டார்.

மேயர், துணை மேயர் தேர்தல் போட்டி இல்லாமல் ஏகமனதாக நடைபெற்றது.

சுந்தர்ராஜ் பெங்களூர் மாநகராட்சியின் 23-வது மேயராக தேர்வு பெற்றுள்ளார்.

ஒரு சுயேச்சை உறுப்பினர் ஆங்கிலத்தில் பதவி பிரமாணம் எடுத்தபோது கன்னடத்தில் பதவிப் பிரமாணம் எடுக்கக்கோரி கூச்சல் எழுந்தது. அந்த உறுப்பினர் கன்னடத்தில் பிரமாணம் எடுக்கும் வரை கூச்சல் இருந்தது.

## இலங்கை தமிழர் படுகொலை:

# உலகநாடுகள் கடும் கண்டனம்

ஜெனீவா, ஆக. 24- இலங்கையில் தமிழர்கள் மீது இனவெறி படுகொலைகள் நடத்தப்பட்டதற்கு உலகநாடுகள் சபையின் மனித உரிமைகள் துணைக்கமிஷன் கூட்டத்தில் உலக நாடுகள் பல கடும் கண்டனம் தெரிவித்துள்ளன.

இலங்கையில் நடந்த படுகொலைகள் கலவரங்கள் குறித்து விசாரிக்க சுயேச்சையான விசாரணைக் கமிஷன் ஒன்றை அமைக்க வேண்டும் என நார்வே நாட்டுப் பிரதிநிதி கூறினார்.

உலக நாடுகள் சபையைச்சேர்ந்த மனித உரிமைகள் துணைக் கமிஷனின் கூட்டம் ஜெனீவா நகரில் நடைபெறுகிறது.

இக்கூட்டத்தில்பங்கேற்றுப் பேசிய பலநாட்டுப் பிரதிநிதிகளும் இலங்கைப் படுகொலைகள் மற்றும் அங்கு நடந்த இனக் கலவரங்கள் குறித்துப் பேசினர்.

இந்தப் பிரச்சினை குறித்துப் பேசிய பல்வேறு நாட்டுப் பிரதிநிதிகளும் பொதுவாக இலங்கைப் படுகொலைகளை கண்டித்தது குறிப்பிடத்தக்கது.

மனித உரிமைகள் குறித்த நிபுணர்களும், அறிஞர்களும் இலங்கைப் படுகொலைகள் அதிர்ச்சியூட்டுவதாகவும் கவலை அளிப்பதாகவும் உள்ளதாக குறிப்பிட்டனர்.

சிறுபான்மையோருக்கு எதிரான அடக்குமுறைகளைக் கண்டிப்பதாகவும் சிறுபான்மையோருக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டியது அவசியம் என்றும் அவர்கள் குறிப்பிட்டனர்.

சிறுபான்மை யோருக்கு எதிரான நடவடிக்கைகளை ஒருபோதும் அனுமதிக்க முடியாது என்றும் கூட்டத்தில் பேசியோர் குறிப்பிட்டனர்.

### விசாரணை கமிஷன் அமைக்கவும்

கூட்டத்தில் பேசிய நார்வே நாட்டு நிபுணர், அஸ்பஜான்யெட் கூறியதாவது:-

இலங்கைச் சம்பவங்கள் கவலைஅளிக்கக்கூடியவை ஆகும்.

எதிர்காலத்தில் இலங்கையில் இத்தகைய சம்பவங்கள் நடைபெறாமல் தடுக்க தக்க நடவடிக்கைகள் எடுக்குமாறுஇலங்கை அரசிடம் வலியுறுத்த வேண்டும்.

இலங்கையில் நடந்த சம்பவங்கள் குறித்து விசாரிக்க, சுயேச்சையான விசாரணைக் கமிஷன் ஒன்றை அமைக்க வேண்டும் எனக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

இலங்கைச் சம்பவங்களால் உலக மக்கள் பெரிதும் கவலையும் அதிர்ச்சியும் அடைந்துள்ளனர்.

இவ்வாறு அஸ்பஜான்யெட் கூறினார்.,

உலக மனித உரிமைகள் குழு மற்றும் உலக சட்ட இன்ஸ்டிடியூட்டின் பிரதிநிதியான செல்வி ஆமியங் பேசுகையில்கூறியதாவது:-

இலங்கை அரசு கடந்த ஆண்டுகளில் கடுமையான நடவடிக்கைகள் எடுத்ததாக கூறியபோதிலும் அங்கு சட்டம்-ஒழுங்குமிகவும் சீர்குலைந்த நிலையில் உள்ளது.

வன்முறை தடுப்புச்சட்டம் என்ற பெயரில் ஒரு சட்டம் கொண்டு வரப்

2ம் பக்கம் பார்க்க

★ தனக்கும் தன் சகோதரரின் பிள்ளைகட்கும் எந்தத் தொடர்பும் இல்லையென்று அறிவித்தது உலகிலேயே தமிழக முதல்வர்தான்

## தமிழக முதல்வருக்கு களங்கம் கற்பிக்க

# மாஜி ஐஜி மோசடி புகார்

## விசாரணைக் கமிஷனில் விவாதம்

சென்னை, ஆக. 24- எனக்கும், எனது சகோதரரின் பிள்ளைகளுக்கும் எந்த தொடர்பும் கிடையாது என்று பகிரங்கமாக அறிவிப்பு வெளியிட்டவர் உலகிலேயே தமிழக முதல்வர் தான். ஆனால் அவரது பெயருக்கு களங்கம் கற்பிப்பதற்காக முன்னாள் ஐ. ஜி. மாணிக்கம் மோசடித்தன குற்றச்சாட்டுக் களைக் கூறியுள்ளார் என்று விசாரணைக் கமிஷன் முன் ராம்ஜெத்மலானி வாதிட்டார்.

குற்றச்சாட்டுக்களைக் கூறிய நபர்கள் கூட சாட்சி சொல்லும்போது முதலமைச்சரோ அல்லது மற்ற அமைச்சர்களோ லஞ்சம் கேட்கவும்இல்லை அவர்களுக்கு நாங்கள் பணம் கொடுத்ததும் இல்லையென்று தெளிவாகக் கூறி இருக்கிறார்கள் என்றும் ராம்ஜெத்மலானி சுட்டிக்காட்டினார்.

சாராய கலவை ஆலை லைசென்ஸ் வழங்கியதில் முறைகேடுகள் நடந்ததாகக் கூறப்பட்ட புகார்களைப்பற்றி விசாரணை செய்யும் நீதிபதி ராமபிரசாத் ராவ் விசாரணைக் கமிஷன் இன்றும் தொடர்ந்து விசாரணையை நடத்தியது.

விசாரணைக் கமிஷன் முன்பு முதல்வர் புரட்சித் தலைவர் சார்பில் ஆஜராகும் சட்ட நிபுணர் ராம்ஜெத்மலானி எடுத்து வைத்த வாதத்தில் கூறியதாவது:-

விசாரணைக் கமிஷன் நியமிக்கப்பட்ட பிறகு முன்னாள் ஐ. ஜி. மாணிக்கம், சுந்தரமூர்த்தி, ரவீந்திரநாத் ஆகியோர் அபிடவிட் தாக்கல் செய்தனர். விசாரணைக் கமிஷன் விதி 8 (1)ன் கீழ் அவர்கள் சாட்சியம் அளிக்க அனுமதிக்கப்பட்டனர்.

இதே விதிமற்றவர்களுக்கும் பொருந்தும் அபிடவிட் தாக்கல் செய்தவர்கள் விரும்பினால் சாட்சி சொல்லலாம், இல்லாவிட்டால் அபிடவிட்டில் முன்பு கூறிய விபரங்களே போதும் என்றால் அத்துடன் விட்டு விடலாம்.

இது முதலமைச்சருக்கும், அமைச்சர்களுக்கும் மற்றவர்களுக்கும் பொருந்தும்.

சுந்தரமூர்த்தியும், ரவீந்திரநாத்தும் எம். ஜி. சக்கரபாணி, சுகுமார், பாலன்ஆகியோர் மீது கோர்ட்டில் ஒரு வழக்கைத் தொடர்ந்துள்ளார்கள்.

இதே நபர்கள் இந்த விசாரணைக் கமிஷன் முன்பும் அபிடவிட் தாக்கல் செய்து இருக்கிறார்கள்.

### முரண்பாடுகள் ஏராளம்

அந்த வழக்கில் கூறப்பட்டுள்ள விஷயங்களுக்கும், இங்கே விசாரணைக் கமிஷன் முன் அவர்கள் கூறுகிற விஷயங்களுக்கும் ஏகப்பட்ட முரண்பாடுகள் உள்ளன.

மாணிக்கம்சுந்தரமூர்த்தி ரவீந்திர நாத் ஆகியோர் முன்பு கூறியிருக்கும் மனுவில் முதலமைச்சர் ரூ. 10.75 லட்சம் பெற்றுக் கொண்ட மாதிரி குற்றச்சாட்டுகளைக் கூறி இருக்கிறார்கள்.

ஆனால் இங்கே விசாரணைக் கமிஷனிலோ அவ்வாறு எதையும் கூறவில்லை.

நாங்கள் முதலமைச்சருக்கு பணம் கொடுக்கவில்லை. மற்ற அமைச்சர்களுக்கும் பணம் கொடுக்கவில்லை என்று கூறியிருக்கிறார்கள்.

முக்கிய சாட்சிகளான சுந்தரமூர்த்தியும் ரவீந்

(2-ம் பக்கம் பார்க்க)

## வழக்கறிஞர் ராம்ஜெத்மலானி வாதம்...

1-ம் பக்கத் தொடர்ச்சி

போதும், குறுக்கு விசாரணைக்கு முதல்வர் வரத்தேவையில்லை; அவருடைய பிரமாணவாக்குமூல பத்திரம் ஒன்றே போதும் என்று நீதிபதி கூறிவிட்டார்.

இவைகளையெல்லாம் நீதிபதி அவர்கள் குறித்துக் கொள்ளவேண்டும். முதல்வர் எம். ஜி. ஆரின் பிரமாண வாக்குமூலத்தில் எல்லா விளக்கங்களும் தரப்பட்டுள்ளன. எனவே அவர் வரவேண்டிய அவசியம் இல்லை.

### கருணாநிதிக்கு உரிமை

பிர... வாக்குமூ... தாக்கல் செய்யாதகரு நிதி, கிருஷ்ணமூர்த்தியோருக்கு கமிஷ... கலந்து கொள்ளும்உரிமை மட்டும் கொடுக்கப்பட்டுள்ளதே. தவிர, குறுக்கு விசாரணை செய்ய அவர்களுக்கு ஏது உரிமை? சுப்ரீம் கோர்ட்டு சட்டம் என்ன சொல்கிறதுஎன்றால், நீதிபதிக்கு தேவைப்பட்டால் குறுக்கு விசாரணை செய்யலாம். இல்லையென்றால் பிரமாண வாக்கு மூலமே போதுமானது.

மாநிலஅரசுமீது மத்திய அரசு கமிஷன் போட்டால் அதை நிரூபிக்க வேண்டியது மத்திய அரசுதான். அதுபோல முதல்வர் மீது குற்றஞ்சாட்டியவர்கள் அந்தக் குற்றச்சாட்டை நிரூபிக்கவேண்டும்.

நீதிபதி அவர்களே, அரசியல் தமாஷுக்காக பல பொய்க் குற்றச்சாட்டுக்கள் கூறப்பட்டுள்ளன. பிரமாண வாக்குமூலம் இருக்கும்போது சாட்சி தேவையில்லை என்று சட்டம் அழுத்தமாகச் சொல்லுகிறது. முதல்வர் மீது சுமத்தப்பட்டுள்ளகுற்றச்சாட்டுகளுக்குஎந்தவிதஆதாரமும் இல்லைஎனவேமுதல்வரை விசாரணை செய்ய வேண்டிய அவசியம் இல்லை.

### ஜோடிக்கப்பட்ட வழக்கு

மாணிக்கம்ரவீந்தரநாத் சுந்தரமூர்த்தி ஆகிய மூன்று பேரும் கிரிமினல் குற்றவாளி போன்றவர்கள். இந்த போலி வழக்கு, மாணிக்கத்தினால் ஜோடிக்கப்பட்டதாகும். அவருக்கு ஆதரவாக சுந்தரமூர்த்தியும், ரவீந்திரநாத்தும் பொய்சாட்சி கூறினார்கள், சட்ட விரோதமாக சதி செய்து சாட்சியங்கள் தயார் செய்து இருக்கிறார்கள்.

எம். ஜி. சக்கரபாணியின் மகன் பாலன் நம்ப முடியாத ஆள் என்று ரவீந்திரநாத் கூறியுள்ளார். அவர் நம்ப முடியாத ஆள் என்றால் அவரிடம் இவர்கள் பணம் கொடுத்ததாகவும் அந்த பணம் நம்ப முடியாத அமைச்சர் ஒருவருக்கு கொடுக்கப்பட்டதாகவும் கதை விடுகிறார்கள்.

இவ்வாறு ஜெத்மலானி பேசினார்.

அமைச்சர் பொன்னையனின் வக்கீல் வேணுகோபால், லைசென்சுதாரர் வக்கீல் சிட்டாலே அரசு வக்கீல் கிருஷ்ணமூர்த்தி, முதல்வர் புரட்சித்தலைவர் சார்பில் செங்கை கணேசன் எம். எல். ஏ. ஆகியோர் விசாரணையில் கலந்து கொண்டார்கள்.

## மாஜி ஐ.ஜி. மோசடி புகார் ...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

திரநாத்தும் சாட்சியம் அளிக்கும்போது ''நாங்கள்மந்திரிகளுக்குப் பணம் கொடுக்கவில்லை. அமைச்சர்களைப் பற்றி தவறான அபிப்பிராயம் கூட எங்களுக்கு இல்லை.

அவர்கள் நாணயத்தை இப்போதும் சந்தேகிக்கவில்லை'' என்று சாட்சியம் கூறி இருக்கிறார்கள். இதை நீதிபதி அவர்கள் கவனத்தில் கொள்ள வேண்டுகிறேன்.

இந்த திட்டத்தை இவர்கள் துவக்குவதற்கு முன்பு பெங்களூர் வர்த்தகர்களான ரவீந்திரநாத்தும், சுந்தரமூர்த்தியும் அண்ணாவின் வளர்ப்பு மகன் கவுதமனை அணுகி இருக்கிறார்கள்.

கவுதமன் சொல்லும் போது முதலமைச்சரை எனக்குத் தெரியும். மூன்று அமைச்சர்களையும் தெரியும் என்று சொல்லி இருப்பதாக இங்கே சாட்சியம்சொல்லி இருக்கிறார்கள்.

ஆனால் எந்த எந்த மந்திரி என்று கூட கவுதமன் அவர்களிடம் ...லவில்லை. ...றகு அமைச்சர் விஜயசாரதியை இவர்கள் சந்தித்ததா' சாட்சியம் ...ளித்து இருக்கிறார்கள்.

அமைச்சர் அவர்களிடம் சொல்லும்போது உங்களுக்கு லைசன்ஸ் கிடைக்கும் என்று சொன்னதாக சாட்சியத்தில் கூறி இருக்கிறார்கள்.

மாணிக்கம் அளித்த சாட்சியத்திற்கும், சுந்தரமூர்த்தி ரவீந்திரநாத் ஆகியோர் சொன்ன சாட்சியங்களுக்கும் நிறைய வேறுபாடு உள்ளது.

இதை நீதிபதி அவர்கள் குறித்துக் கொள்ள வேண்டுகிறேன்.

முன்னாள் ஐ. ஜி. மாணிக்கம் சாட்சி சொல்லும் போது அமைச்சர்கள் விஜயசாரதிக்கும், பொன்னையனுக்கும் பணம் கொடுத்ததாகவும் இதில் ஒரு பகுதி முதல்வருக்குப் போகும் என்றும் விஜயசாரதி சொன்னதாகவும் மாணிக்கம் தனது சாட்சியத்தில் கூறி இருக்கிறார்.

### முன்னாள் ஐ.ஜி.யின் மோசடி

ஆனால்அவரதுகூட்டாளிகளான ரவீந்திரநாத்தும் சுந்தரமூர்த்தியும் அப்படி சொல்லவில்லை இதில் சம்பந்தப்பட்டவர்கள்ரவீந்திரநாத்தும் சுந்தரமூர்த்தியும்தான். ஆக மாணிக்கம் சொன்னதுமுழுக்கமுழுக்க மோசடியானது.

சுந்தரமூர்த்தியும், ரவீந்திரநாத்தும் கவுதமனை சந்தித்த போது கலவை ஆலை உரிமம் பெறுவதற்காக முதலமைச்சரையோ, அல்லது மற்ற அமைச்சர்களையோ அணுகப்போவதாகச் சொல்லவில்லை.

இதை அவர்கள் சாட்சியத்திலேயே தெளிவுபடுத்தி இருக்கிறார்கள்.

அமைச்சர்களுக்குப் பணம் கொடுக்க வேண்டும் என்று கவுதமன் கேட்டார் என்பதாக கமிஷன் முன் யாரும் சாட்சி சொல்லவில்லை.

சுந்தரமூர்த்தியும், ரவீந்திரநாத்தும் கோர்ட்டில் வழக்குத் தொடர்ந்து இருக்கிறார்கள். அந்த வழக்கில் சுகுமாரிடம் பணம் கொடுத்தபோது கவுதமன் உடன் இருந்தார் என்று குறிப்பிட்டு இருக்கிறார்கள்.

ஆனால் இங்கே அபிடவிட்டில் கவுதமனை நீக்கி விட்டார்கள்.

1982க்குப் பிறகு கவுதமனைபபார்க்கவேயில்லை என்றும் கூறுகிறார்கள்.

கவுதமன் மூலமாகத் தான் எல்லாம் அணுகினோம், கவுதமன்மூலமாகத் தான்பணம்கொடுத்தோம் என்றெல்லாம் கூறியவர்கள் அவரை இந்த விசாரணைக் கமிஷன் முன் சாட்சியம் அளிக்க அழைத்து வராதது ஏன்?

கேட்டால் அபிடவிட் கொடுக்கும்படி கவுதமனை அணுகவில்லை என்கிறார் ரவீந்திரநாத்

### பிளேட்டையே திருப்பிவிட்டனர்

கலவை ஆலைக்கு லைசன்ஸ் கிடைக்காததால் சுகுமாரிடம் பணத்தைத் திருப்பித் தருமாறு கேட்டு விட்டு பிறகு புரோநோட்டுஎழுதி வாங்கினோம், கவுதமன் உடன் இருந்து புரோநோட்டு எழுதி வாங்கித்தந்தார் என்று இவர்கள்போட்டவழக்கில் குறிப்பிட்டு இருக்கிறார்கள்.

ஆனால் வழக்கில்அப்படி கூறிவிட்டு இங்கே விசாரணைக் கமிஷன் முன்பு கதையையே மாற்றி மாணிக்கம்தான் உடன் இருந்து வாங்கித் தந்தார் என்றுபிளேட்டை திருப்பி விட்டார்கள்.

இதுபற்றி ரவீந்திரநாத்திடம் குறுக்கு விசாரணை செய்யும் போது நான் திருப்பி திருப்பிக் கேட்டேன். (குறுக்கு விசாரணை விபரத்தைப் படித்துக் காட்டினார்.)

ஆனால் கவுதமன் பெயரைச் சொல்லாமல் மாணிக்கத்தின் பெயரைத் தான் ரவீந்திரநாத் சொல்லுகிறார்,

பொய்யான தகவல்களை வெளியிட்டுக் கொண்டு இருக்கும் இந்த மோசமான மனிதனான ஐ. ஜி. மாணிக்கத்தினால் பொய்யான சாட்சியம் சொல்லி கவுதமனைப் பற்றியும் தவறான தகவல்களை ரவீந்திரநாத்தும் சுந்தரமூர்த்தியும் சொல்லிஇருக்கிறார்கள்.

நான் ரவீந்திரநாத்தை குறுக்கு விசாரணை செய்தபோது பல கேள்விகளைக் கேட்டேன்.

விஜயசாரதிக்கு எதிராக குற்றச்சாட்டுக்களை கூறுகிறீர்களா என்று கேட்டேன்.

அவர் இல்லைஎன்றார்.

அமைச்சர்சட்டவிரோதமாக செயல் பட்டாரா என்று கேட்டேன். 'அதற்கும் இல்லை என்று பதில் அளித்தார்.

உங்களுக்கு லைசென்ஸ் கிடைக்கும் என்று விஜயசாரதி வாக்குறுதி கொடுத்தாரா என்றும் கேட்டேன்.

அதற்கும் இல்லை என்று பதிலளித்தார். மந்திரியின் நாணயத்தில் உங்களுக்கு சந்தேகம் உண்டா என்று கேட்டேன்.

அதற்கும் ரவீந்திரநாத் இல்லை என்று பதிலளித்தார்.

விஜயசாரதியை சந்தித்தோம் நீங்கள் இயந்திரங்களை வாங்குங்கள் என்று அவர் கூறினார் என்று சாட்சியம் அளித்தார். அப்படிச் சொல்லியிருந்தால் அது தப்பு இல்லை.

முன்பு இருந்த விதியின் படி கலவை ஆலை உரிமம் பெற விண்ணப்பித்தவர்கள் இடம் பார்த்து தயார் நிலையில் இருந்து கொண்டுதான் விண்ணப்பிக்க வேண்டும். அமைச்சர் விஜயசாரதியைப் பற்றி சுந்தரமூர்த்தியும் எந்தக் குற்றச்சாட்டையும் கூறவில்லை,

பல முதல்வர்களுக்கு தங்களது குடும்பத்தினரால் தான் கெட்டபெயர் ஏற்படுவதுண்டு. ஆனால் அந்த உறவுகளை எந்த முதலமைச்சரும் துண்டித்துக் கொள்ள மாட்டார்கள்.

ஆனால்தமிழகமுதலமைச்சரை பொறுத்தவரை 'எனக்கும் எனது அண்ணன் குடும்பத்தினருக்கும் எந்தத் தொடர்பும் கிடையாது. அவர்களுடன் வைத்துக் கொள்ளும் எந்த நடவடிக்கைக்கும் எனக்கும் எந்தத் தொடர்பும் இல்லை'' என பகிரங்கமாக அறிவித்து விட்டார்.

### வரலாற்று முதல்வர்

உலகில் எந்த முதலமைச்சராவது இவ்வளவு நேர்மையாக உறுதியாக உறவுகளை துண்டித்துக் கொண்டு விடுவது உண்டா?

உறவுகளைத்துண்டித்து கொண்டது பற்றிய அறிவிப்புகளை 1981 மார்ச் 28ந் தேதி தமிழக முதல்வர் பத்திரிகைகளில் வெளியிட்டுள்ளார்.

அதாவது ரவீந்திரநாத்தும் சுந்தரமூர்த்தியும், சாராய கலவை ஆலைக்காக சக்கரபாணி குடும்பத்தினரைச் சந்தித்ததாக சொல்லுகிறார்களே அதற்கு முன்பே இந்த அறிவிப்பு வந்துள்ளது.

உரிமம் பெறுவதற்காக ரூ. 10.75 லட்சம்பெற்றதாக அவர்கள் சொல்லவில்லை.

இடம் பார்த்துக் கொடுப்பது தண்ணீர் மற்றும்மின்சார வசதி செய்து தருவது போன்றவற்றுக்காகபணம்கொடுத்தோம். முறைகேடான காரியத்திற்குக் கொடுக்கவில்லை. அது லஞ்சமும் அல்ல என்று சுந்தரமூர்த்தியும் ரவீந்திரநாத்தும் தெளிவாக சாட்சிசொல்லியுள்ளார்கள்.

இந்தவிசாரணைகமிஷன் என்ன பிரச்சினையை விசாரிக்க வேண்டும் என்றுவிதிமுறை உள்ளது? முதலமைச்சர், அமைச்சர்கள் மற்றும் அதிகாரிகள் லஞ்சம் வாங்கினார்களா? என்பதை கண்டறிய வேண்டியது தான் கமிஷனின் கடமை.

ஆகவே வரையறுக்கப்பட்ட அந்தப் பணிக்கு மேல், வேறு பணிகளை மேற்கொள்ள வேண்டியதில்லை.

சுப்ரீம் கோர்ட் தீர்ப்பும் இதைத் தெளிவுபடுத்துகிறது.

'முதலமைச்சரை போய் சந்தித்தோம். உங்கள் சகோதரரிடம் பணம் கொடுத்தோம் எனச் சொன்னோம்' என அபிடவிட்டில் மாணிக்கம் கூறியுள்ளார். ஆனால் சாட்சிகளை விசாரித்தபோது அப்படியாரும் சொல்லவில்லை. முதலமைச்சரின் அறைக்குள் கவுதமன் போய் இருக்கிறார். ஆனால் இதை மாற்றி மாணிக்கம் மாற்றுஅபிடவிட் தாக்கல் செய்துள்ளார்.

கருணாநிதியின் வக்கீல் நடராஜன் நேற்று பேசும் போது சாராய கலவை ஆலை மூலம் மாதாமாதம் லட்சம் லட்சமாக வருமானம் வருகிறது எனச் சொன்னார்

### கட்டுக்கதை

இப்படி லட்சம் லட்சமாக வருமானம் வருகிற தொழிலுக்கு 7 பேரும் சேர்ந்து 10.75 லட்சம் ரூபாய் தான் லஞ்சம் பெறுவார்களா?

(பலத்த சிரிப்பு)

எனவே இவர்கள் 'சொல்வது எல்லாம்கட்டுக்கதை

இவர்கள் லஞ்சம் கொடுத்திருந்தால் லைசென்ஸ் வந்திருக்க வேண்டுமே? இவர்கள் லஞ்சமும் கொடுக்கவில்லை. முறையாக இவர்கள் விண்ணப்பிக்காததால் லைசென்சும் கிடைக்கவில்லை.

### பிளாக்மெயில் வேலை

எனவேஇப்போதுபிளாக்மெயில் வேலையில் இறங்கியுள்ளார்கள்.

கலவை ஆலை சம்பந்தமாக சக்கரபாணி குடும்பத்தினரை அணுகியபோது 50 சதவிகித பங்கு தருவீர்களா என அவர்கள் கேட்டதாகவும் இங்கே சாட்சி கூறினார்கள்.

சாராயஆலைக்கு வேண்டிய இடத்தைத் தேர்ந்தெடுப்பது தண்ணீர் சப்ளை கொடுப்பது மின்இணைப்பு கொடுப்பது அதற்காகத்தான் சுகுமாரிடம் பணம் கொடுத்தோம் என்று ரவீந்திரநாத் சாட்சியமளித்தார்.

இவர்கள் இப்போது சொல்லுகிற தகவல்களுக்கும் கோர்ட்டில் முன்பு தொடர்ந்த வழக்குகளுக்கும் நிறைய வித்தியாசம் உள்ளது. இதை சாட்சி சுந்தரமூர்த்தியே ஒப்புக் கொண்டார்.

''லஞ்சம் கொடுக்கவில்லை நாங்கள் பெங்களூரில் இருப்பதால் சென்னையில் இருந்து வேலைகளைக் கவனிக்க சுகுமாருக்குப் பணம் கொடுத்தோம்'' என்று சுந்தரமூர்த்தி சாட்சியம் கூறினார்.

அமைச்சர் விஜயசாரதியை சந்தித்து விட்டு அவர் கொடுத்த வாக்குறுதிக்கு ஏற்பதான், கலவை ஆலைக்கு வேண்டிய மிஷின்களுக்குஆர்டர் கொடுத்தோம் என 2 பேரும் சாட்சி கூறினார்கள்.

அது பொய்யான தகவல் ஏன் என்றால் மந்திரியை சந்திப்பதற்கு முன்பே எந்திரங்களுக்கு அவர்கள் ஆர்டர் கொடுத்திருக்கிறார்கள் எனவே உண்மைக்கு மாறான குளறுபடிகள் நிறைந்த ஒரு புகாரை இட்டுக்கட்டி கொடுத்திருக்கிறார்கள்.

இவர்கள் கூறிய குற்றச்சாட்டுகள் அனைத்தும் பொய்யானது.

இவ்வாறு ராம்ஜெத்மலானி கூறினார்.

அவர் தொடர்ந்து வாதத்தை எடுத்து வைப்பார்.

கோர்ட்டில் சிட்டாலே என். சி. ராகவாச்சாரி, சாந்தகுமார் ஸ்ரீராம் மற்றும் பத்மினி ஜேசுதாசன், அச்சிறுபாக்கம் எம்.எல்.ஏ. கணேசன் ஆகியோர் ஆஜரானார்கள்.

## உலகநாடுகள் கண்டனம்

(1-ம் பக்கத்தொடர்ச்சி)

பட்டு அதுநிரந்தரமாக்கப்பட்டது. அவசரநிலைஅமுல் படுத்தப்பட்டு, அவசர நிலை அமுலில் இருக்கும் போதுபாராளுமன்றத்தின் ஆயுள்காலம் மேலும் 6 ஆண்டுகள் நீடிக்கப்பட்டது.

சட்டம்-ஒழுங்கில் நம்பிக்கை இல்லாத போலீஸ் அதிகாரிகளுக்கு பதவி உயர்வு அளிக்கப்பட்டது.

சமீபத்தில் நடந்த இனக் கலவரத்தில் ராணுவத்தினர் பங்கேற்றுள்ளனர்.

இது குறித்து இலங்கை அரசு நேர்மையான முறையில் விசாரணை நடத்த வேண்டும்.

### மறு பரிசீலனை

இலங்கை அரசு அமுலாக்கியுள்ள வன்முறைத் தடுப்புச் சட்டத்தை அந்த அரசு மறு பரிசிலனை செய்ய வேண்டும்.

இலங்கையில் மனித உரிமைகள்உரிய வகையில் அளிக்கப்படுகிறதாஎன்பது குறித்து நேரில் கண்டறிந்துமனித உரிமைகள் கமிஷனுக்கு அறிக்கை சமர்ப்பிக்க துணைக்குழு இலங்கைக்கு அதிகாரி ஒருவரை அனுப்ப வேண்டும் எனக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

இவ்வாறு யங் பேசினார்.

பாகிஸ்தான் நாட்டைச் சேர்ந்த ராபாட்மாகாதி பேசுகையில், ''இலங்கை நிகழ்ச்சிகள் குறித்து முழு அளவில் பரிசிலனை செய்யப்படவேண்டும்'' என்றார்.

கூட்டத்தில் மேலும் பல நிபுணர்கள் பங்கேற்றுப் பேசினர்.

குழந்தைகள் மருத்துவத்தில்

## சிறப்பான சேவை: ஸ்டான்லி டாக்டர்களுக்கு விருது

சென்னை, ஆக. 24— சென்னை ஸ்டான்லி மருத்துவக் கல்லூரியைச் சேர்ந்த டாக்டர்கள் ஜான்சாலமன், சி.வி. ரவி சேகர்.

இந்த டாக்டர்கள் கொல்லிமலைப்பகுதியிலும், சோழவரம் பகுதியிலும் குழந்தைகள் மருத்துவத்தில் சிறப்பான சேவை புரிந்ததற்காக சிறப்பு விருதுகள் வழங்கப்பட்டன.

டாக்டர் சாலமனுக்கு டாக்டர் கே.ஏ. கிருஷ்ணமூர்த்தி விருதும், ரவி சேகருக்கு பேராசிரியர் திருஞானசம்பந்தம் விருதும் வழங்கப்பட்டுள்ளது.

## ரெயில் ஓசிப் பயணிகளுக்கு வட்டிக்கு பணம் கொடுத்து மீட்கும் மார்வாரிகள்

சென்னை, ஆக 24— ரெயிலில் சோதனையாளர்களிடம் அகப்பட்டுக் கொள்ளும் ஓசிப் பயணிகளுக்கு அங்கேயே வட்டிக்கு பணம் கொடுத்து மீட்கும் சம்பவங்கள் இப்போது மின்சார ரயில் நிலையங்களில் பெருகி விட்டன.

ரெயில்வே அதிகாரிகளையே திடுக்கிட வைத்த இந்த சம்பவங்கள் பற்றியவிவரமாவது:-

ரெயில்வே போலீசார் மற்றும் ரெயில் பாதுகாப்புப்படையினரின் உதவியோடு சோதனையாளர்கள், கடந்தநிங்கட்கிழமையன்று கொரட்டூர் ரெயில்நிலையத்தில் திடீர் சோதனை நடத்தினார்கள்.

இந்தச் சோதனையின் போது ஏராளமான ஓசிப்பயணிகள் பிடிபட்டனர். அபராதத்துடன் தங்களது பயணக் கட்டணத்தையும் செலுத்துவதற்கு திருதிருவென்று விழித்துக் கொண்டிருந்த அந்த ஓசிப் பயணிகள் தங்களைக் காப்பாற்ற யாராவது வருவார்களா என்று அங்கும் இங்கும் பார்த்துக் கொண்டிருந்தது போல் அதிகாரிகளுக்குத்தோன்றியது,

அப்போது திடீரென்று ஒரு மார்வாரி வாலிபர் கத்தை கத்தையாக ரூபாய் நோட்டுகளுடன் தோன்றினார்.

பிடிபட்ட பயணிகளிடம் இருந்து கைக்கடிகாரம், மோதிரம், ''பிரீப்கேஸ்'' பெட்டி மற்றும் சில விலையுயர்ந்த பொருள்களை வாங்கிக் கொண்டு அந்த மார்வாரி வாலிபர் அவர்களுக்குப் பணம் கொடுத்தார்.

பணத்தைவாங்கிய ஓசிப் பயணிகள் சோதனையாளர்களிடம் செலுத்திவிட்டு ஜாம் ஜாம் என்று வெளியே சென்றனர்.

இப்படி சுமார் 30பயணிகளை அந்த மார்வாரி வாலிபர் வட்டிக்கு பணம் கொடுத்துமீட்டார்.

இந்த அடகு பிடிக்கும் வேலை ஆங்காங்கே ரெயில்வே நிலையங்களில் நடப்பதைக் கண்டு அதிகாரிகள் அதிசயித்தனர்

மற்றும் ஒரு அதிசயத்தைக் கண்டு அதிகாரிகள் திகைத்தனர்.

அன்றுபிடிபட்டவர்களில் பெரும்பான்மையினர் படித்தவர்கள். நல்ல உயர் பதவிகளில் பணியாற்றுகிறவர்கள். சுமார் 10 சதவிகிதத்தினர் மட்டும்தான் உண்மையில் டிக்கெட் வாங்க ... ஏழை, எளியவர்கள் காய்கறி வியாபாரம் செய்யும் சில பெண்களும் அப்போது பிடிப்பட்டனர். அவர்களிடம் கத்தை கத்தையாக ரூபாய் நோட்டுகள் இருந்தும் அவர்கள் டிக்கட் வாங்கவில்லை ''ஏதோ ஒரு நாளில்தான் இப்படி திடீர் சோதனை நடக்கிறது. அப்போது பணத்தை கட்டிவிட்டால் போயிற்று அதற்காக ஏன் தினந்தோறும் டிக்கட் வாங்க வேண்டும்'' என்ற கருத்தில் இந்த ஓசிப் பயணிகள் பயணம் செய்வதாக அதிகாரி ஒருவர் கூறினார்.

அன்று நடந்த திடீர் சோதனையின் போது மட்டும் ஓசிப் பயணிகளிடம் இருந்து ரூ 6 ஆயிரம் வரை வசூலிக்கப்பட்டது.

## பேச்சாளர் பட்டியலில் இருந்து நீக்கம்

கழகம் அறிவிக்கின்ற கூட்டங்களில் கலந்து கொள்ளாத காரணத்தால் இன்று முதல் தலைமைக் கழக பேச்சாளர் பட்டியலில் இருந்து கீழ்குறிப்பிட்டவர்கள் நீக்கப்படுகிறார்கள்.

முகவை மாணிக்கம்

நாகை இ... றயடியான்

-ஜெயலலிதா

சென்னை-14 கொள்கை பரப்புச் செயலாளர்

24.8.83 அனைத்திந்திய அண்ணா தி. மு.கழகம்



—கடலூர் துரை

PUBLISHED BY K RAVINDRAN ON BEHALF OF THANGAMANI PUBLICATIONS AND PRINTED BY HIM AT ALL INDIA ANNA D M K PERARIGNAR ANNA TRUST PRESS AT 34. NELSON MANICKAM ROAD MADRAS 600 029.

EDITOR: B. PARASURAMAN




# மத்திய ஆயுதப்படை லாட்டரி

## அறிவிக்கும்

# உலகின் மிகப் பெரிய குலுக்கல்

முதல் பரிசு ரூ.



கோடிகள்

**ஆறுதல் பரிசுகள் (5) ரூ. 10,000 தலா 2-வது பரிசு ரூ. 20,00,000 (ரூ. 20 லட்சம்)**

| | | |
|---|---|---|
| 3-வது பரிசு (24) | ரூ. | 1,00,000 தலா |
| 4-வது பரிசு (30) | ரூ. | 50,000 தலா |
| 5-வது பரிசு (180) | ரூ. | 10,000 தலா |
| 6-வது பரிசு (1,800) | ரூ. | 1,000 தலா |
| 7-வது பரிசு (18,000) | ரூ. | 100 தலா |
| 8-வது பரிசு (24,000) | ரூ. | 50 தலா |
| 9-வது பரிசு (1,80,000) | ரூ. | 20 தலா |

| 61 சதவித பரிசுகள் | மொத்த பரிசு தொகை ரூ. 3,68,50,000 | மொத்த பரிசுகள் 404041 கவுண்டர் பாயில் பரிசுகள் உள்பட | விற்பனையாளர் பரிசுகள் 2,22,000 |
|---|---|---|---|

**★ டிக்கெட் விலை ரூ. 10 மட்டும் ★**

குலுக்கல் நாள்:

**9-10-83**

* முழு விபரங்களுக்கு தயவு செய்து டிக்கெட்டின் பின்புறம் பார்க்கவும்.

மத்திய ரிசர்வ் போலீசார்விற்கும்டிக்கெட்டுகளுக்கு விசேஷ பரிசாக ரூ 7 லட்சம் வரை வழங்கப்படும்

**பி. என். பிரசாத்,**
இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஆப் போலீஸ்
சி.ஆர் பி எப். 4-வது பிரிவு
மத்திய ரிசர்வ் போலீஸ் படை.
ஷில்லாங்

விரையுங்கள்! இன்றே உங்கள் டிக்கெட்களை வாங்குங்கள்
நீங்கள் அதிர்ஷ்டசாலிகளில் ஒருவராக இருக்கலாம்!!

மொத்த விற்பனையாளர்
**கரண் & கோ.,**
2 வது மாடி ஓட்டல் காண்டினெண்டல் அனெக்ஸ்
ரீகல் பில்டிங், கன்னாட் பிளேஸ்
புதுடெல்லி 110001
போன். ஆபீஸ்: 310026. 311208
வீடு 621070

கஞ்சன் ஜங்கா

குலுக்கல் முடிவு:

## மதுரைக்கு ரூ. 2 லட்சம் பரிசு

சென்னை, ஆக. 24— கஞ்சன் ஜங்கா லாட்டரி முடிவுகள் வருமாறு:-

முதல் பரிசு
ரூ. 1 லட்சம்
வி. 720857
(மதுரை)
2-வது பரிசு
ரூ. 50 ஆயிரம்
டி. 273332 (சென்னை)
3-வது பரிசு
ரூ. 20 ஆயிரம்
டி. 824643 யூ. 860402
வி. 518821
4-வது பரிசு
ரூ. 10 ஆயிரம்
டி. 895026, யூ. 557004, வி. 846298.

## அரியானா லாட்டரி

முதல் பரிசு
ரூ. 1 லட்சம்
ஏ. 830914
2-வது பரிசு
ரூ. 10 ஆயிரம்
ஏ. 886199, பி. 775410, சி. 739901, டி. 737557

## இமாலயன் லாட்டரி

முதல் பரிசு ரூ. 1 லட்சம் எச். எக்ஸ். 344141 (வேலூர்) 453547 (பாட்னா) எச். ஒய். 973645 (கல்கத்தா) 421717 (திருச்சி) எச். இஸட். 874451 (மதுரை) 490613 (கோவை)

2-வது பரிசு ரூ.20ஆயிரம் எச்எக்ஸ் 920904, எச்ஒய். 140458, எச்இசட் 153382 இவை மூன்றும் தமிழகத்தில் விற்கப்பட்டுள்ளன.

3-வது பரிசு
ரூ. 500 வீதம்

| | | |
|---|---|---|
| 27671 | 27355 | 32552 |
| 43151 | 48217 | 48779 |
| 52604 | 60340 | 71446 |
| 73341 | | |

4-வது பரிசு
ரூ. 50 வீதம்

| | | | |
|---|---|---|---|
| 1184 | 1447 | 1388 | 1698 |
| 2906 | 3244 | 3604 | 3674 |
| 3902 | 4361 | 4394 | 4674 |
| 5459 | 6218 | 6736 | 6816 |
| 7101 | 7449 | 7504 | 7680 |

5-வது பரிசு
ரூ. 20 வீதம்

| | | | |
|---|---|---|---|
| 0499 | 1009 | 1086 | 1429 |
| 1471 | 1765 | 1929 | 2290 |
| 2327 | 2352 | 3843 | 4940 |
| 6763 | 6833 | 7158 | 7450 |
| 7616 | 8345 | 8402 | 9864 |

6-வது பரிசு
ரூ. 10 வீதம்

| | | | |
|---|---|---|---|
| 007 | 121 | 274 | 334 |
| 443 | 528 | 625 | 714 |
| 839 | 988 | | |

சிங்கப்பூரிலிருந்து

## விமானத்தில் கடத்தப்பட்ட 5 ஆயிரம் கடிகாரங்கள் பறிமுதல்

சென்னை, ஆக. 24— சிங்கப்பூரிலிருந்து சென்னைக்கு விமானத்தில் கடத்திவரப்பட்ட 4910 கை கடிகாரங்கள் பறிமுதல் செய்யப்பட்டன. அவற்றைக் கடத்திவந்த 3 பேர் கைது செய்யப்பட்டனர்.

அந்த 3 பேர்களும் நைஜீரியா நாட்டைச் சேர்ந்தமாணவர்கள்அவர்களில் ஒருவர் பெண்.

அவர்கள் கொண்டு வந்திருந்த பெட்டியின் அடியில் ரகசிய அறையில் 4910 எலக்டிரானிக் கைக்கடிகாரங்கள் மறைத்து வைக்கப்பட்டிருந்தன.

அதேபோல் 16,500 பட்டன்செல்களும்அவர்கள் காலுறை, கைப்பைகளில் மறைத்து வைத்திருந்தனர். அவர்களிடமிருந்து கைப்பற்றப்பட்டபொருட்களின் மொத்த மதிப்பு 4 லட்சத்து 50 ஆயிரம் ரூபாயாகும்.

இதேபோல் சிங்கப்பூரிலிருந்து 3 லட்சத்து 42 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள 1800 கிராம் எடையுள்ள 10 தங்கக்கட்டிகளை உடலில் மறைத்து வைத்துகடத்தி வந்ததாக அப்துல் ரகீம் அமீது என்ற இருவரை மீனம்பாக்கம் விமான நிலையத்தில் அதிகாரிகள் கைதுசெய்தனர்.

# பாகிஸ்தான் கலவரம் எல்லாப் பகுதிகளிலும் பயங்கரமாகபரவுகிறது

நீதிமன்றம், வங்கிகள் தீக்கிரை

**இஸ்லாமாபாத், ஆக.24- ராணுவ ஆட்சியை எதிர்த்து பாகிஸ்தானில் நடக்கும் கலவரம் சிந்து பஞ்சாப் மாநிலம் உள்பட எல்லா பகுதிகளிலும் பயங்கரமாக பரவுகிறது. துப்பாக்கிச்சூடு ஒரு பக்கம் நடக்க, மறுபக்கம் நீதிமன்றம் வங்கி ரெயில் நிலையங்களுக்கு ஆர்ப்பாட்டக்காரர்கள் தீ வைத்துக் கொளுத்தினர்.**

அதிபர்ஜியாவுல்ஹக்கின் ராணுவ ஆட்சியை எதிர்த்து பாகிஸ்தான் மக்கள்போர்க்கொடிஉயர்த்தியுள்ளனர். ராணுவ ஆட்சி முறியடிக்கப்பட்டு பாகிஸ்தானில் பொதுத்தேர்தல் நடைபெற வேண்டும் என்று எதிர்க்கட்சிகள் போராட்டம் நடத்துகின்றன.

நேற்று 10-வது நாளாக ஆர்ப்பாட்டம் பல பகுதிகளில் நடந்தது. தெற்குப் பகுதியில் நடந்து வந்த கலவரம் நேற்று சிந்து, பஞ்சாப் மாநிலப் பகுதிகளிலும்பயங்கரமாக உருவெடுத்தது.

ஜனநாயக இயக்கத்தைச் சேர்ந்த கட்சியினர் மற்ற முக்கிய நகரங்களிலும் கலவரத்தை பரப்புவதில் தீவிரமாக ஈடுபட்டனர். சிந்து, பஞ்சாப் மாநிலப்பகுதிகள் வழியாக பாகிஸ்தானின் இதர பகுதிகளிலும் ஆர்ப்பாட்டத்தை நடத்தி செல்லுவதில் அவர்கள் மும்முரமாக இருந்து வருகிறார்கள். சிந்து நதிப் பள்ளத் தாக்குப் பகுதிகளில் ஏற்பட்ட கலவரம் நேற்று பல்வேறு சாலைகள், தெருக்கள் ஆகியவற்றிலும் பரவின.

கலவரப்பகுதிகளில் நடவடிக்கை எடுத்த போலீசார் மீது ஆர்ப்பாட்டக்காரர்கள் தாக்குதலை நடத்தினார்கள்.

### போலீசார் துப்பாக்கிச்சூடு

அப்போதுபோலீசார்துப்பாக்கிச் சூடு நடத்தினர். ஆர்ப்பாட்டக்காரர்கள் தெற்கு சிந்து மாநிலத்தில் உள்ள நீதி மன்றங்கள் வங்கிகள் மற்றும் ரெயில் நிலையங்களுக்கு தீ வைத்தனர்.

போலீசார் நடத்திய துப்பாக்கிச்சூட்டில் 2 பேர் உயிரிழந்தனர். சுமார் 50-க்கும்மேற்பட்டவர்கள் காயம் அடைந்தனர்.

### 18 பேர் மரணம்

இதுவரை நடந்த கலவரத்தில் 18 பேர் உயிரிழந்ததாக பாகிஸ்தான் அரசு அறிவித்தது.

இறந்தவர்களின் எண்ணிக்கை 60க்கும் மேல் இருக்கும் என்று எதிர்க்கட்சி வட்டாரங்கள் தெரிவித்தன.

"கந்த்கோட், காயர்பூர், ராணிப்பூர் முதலிய பகுதிகளில் கலவரம் பயங்கரமாக நடந்தது.

கராச்சியில் சுமார் 200-க்கும் மேற்பட்ட வழக்கறிஞர்கள் "ஜியாவுல் அரசு அடியோடு ஒழிக" என்று கோஷம் போட்டு ஊர்வலம் நடத்தி ஆர்ப்பாட்டம் செய்தனர்.

கலவரப் பகுதிகளில் பள்ளிகள், கல்லூரிகள் மற்றும் பல பொது நிறுவனங்களும் கடந்த 3 நாட்களாகவே மூடப்பட்டன.

இந்தக் கட்டத்தில் நேற்று கராச்சியில் நடைபெற்ற ஒரு மருத்துவமனை திறப்பு விழாவில் கலந்து கொண்டு பேசிய அதிபர் ஜியாவுல் ஹக் பாகிஸ்தான் கலவரத்தை சில வெளிநாட்டு ஏஜென்சிகள் தூண்டி விடுகின்றன என்று கூறினார்.

ஆனால் ஏஜென்சிகளின் பெயர்களை அவர் குறிப்பிடவில்லை.

வரும் 1985ஆம்ஆண்டில் பொதுத் தேர்தல் நடத்த திட்டமிடப்பட்டுள்ளது என்றும் அப்போது பாகிஸ்தான் ஜனாதிபதியை மக்கள் தேர்ந்தெடுப்பார்கள் என்றும் அவர் கூறினார்.

## சாராயக்கடை லைசென்சு வழங்கலஞ்சம்: அதிகாரி கைது

சென்னை, ஆக. 24— சாராயக் கடைக்கு லைசென்சு வழங்குவதற்கு ரூபாய் ஆயிரம் லஞ்சம் வாங்கியதாக மன்னார் குடிஆயத்துறைஆய்வாளர் பாலசுப்பிரமணியம் என்பவர் கைது செய்யப்பட்டார். இத் தகவல் அரசு குறிப்பு ஒன்றில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

## ராஜஸ்தான் செஷன்சு நீதிபதி டிஸ்மிஸ்

ஜோத்பூர், ஆக. 24— ராஜஸ்தான் செஷன்சு நீதிபதி ஒருவர் ஊழல், மற்றும் உறவினர்களுக்கும், வேண்டியவர்களுக்கும் ஆதரவு காட்டியதாக டிஸ்மிஸ் செய்யப்பட்டுள்ளார்.

ராஜஸ்தான் ஜின்ஜினு மாவட்ட செஷன்சு நீதிபதியாக இருந்தவர் மாங்குத்ராம். இவர் ஊழல், மற்றும் உறவினர்களுக்கு ஆதரவு காட்டியதாக வந்த புகாரையொட்டி மாநில கவர்னர் இவரை வேலையிலிருந்து டிஸ்மிஸ் செய்துள்ளார். ராஜஸ்தான்உயர்நீதிமன்ற நிர்வாக ரிஜிஸ்திரார் அளித்த சிபாரிசின் பேரில் இந்தநடவடிக்கைஎடுக்கப்பட்டுள்ளது.

மேல்நிலைப்பள்ளி துவங்க

## அரசு விதித்த நிபந்தனை சரியே: ஐகோர்ட் தீர்ப்பு

**சென்னை, ஆக 24-தனியார் நிர்வாகத்தில் மேல்நிலைப்பள்ளிகள் துவங்குவதானால் ரூ 25 ஆயிரம் அறக்கொடை உருவாக்க வேண்டும் என்று தமிழக அரசு அறிவித்தது செல்லும் என்று உயர்நீதிமன்றம் தீர்ப்பளித்தது.**

சென்னை வேப்பேரியிலுள்ள கிறிஸ்துவ சமுதாயத்தைச் சேர்ந்த ஒரு தனியார் பள்ளி நிர்வாகம் மேல்நிலைப்பள்ளி ஒன்றை துவக்க 1977-ஆம் ஆண்டு முடிவு செய்து, அரசின் அனுமதியைக் கேட்டது.

இந்த மேல்நிலைப் பள்ளிக்கு அங்கீகாரம் அளிக்க ரூ. 25 ஆயிரம் அறக்கொடை உருவாக்க வேண்டும் என்று அரசு அப்பள்ளி நிர்வாகத்தைக் கேட்டுக் கொண்டது.

இவ்வாறு நிபந்தனை விதிப்பது அரசியல்சட்டத்திற்குவிரோதமானதுஎன்று அந்த நிர்வாகம் உயர்நீதி மன்றத்தில் வழக்கு தொடர்ந்தது.

இந்த வழக்கை விசாரித்த நீதிபதி மோகன் அரசு விதித்த நிபந்தனை செல்லும் என்று தீர்ப்புக் கூறினார்.

தனியார் நிர்வாகங்கள் நடத்தும் பள்ளிகளில் பணியாற்றும் ஆசிரியர்களுக்கு உரிய சம்பளம் கிடைக்காமல் போகும் போது அந்த ஆசிரியர்கள் நலனைப் பாதுகாப்பதற்காகவும், ஒழுங்காகசம்பளம்கிடைக்கச் செய்வதற்காகவும் விதிக்கப்பட்டுள்ள இந்த நிபந்தனை கடுமையானதல்ல, என்று நீதிபதி மோகன் தனது தீர்ப்பில் கூறியுள்ளார்.

### பிறப்பு

பொதட்டூர் பேட்டை இ. எஸ். டி. நகர் கழக செயலாளர் கே. எஸ். சுந்தரமூர்த்தி- மேரி தம்பதிகளுக்கு கடந்த 19-ந் தேதி காலை ஆண் குழந்தை பிறந்தது தாயும் சேயும் நலம்.

# கடன் தொல்லை: 6 பேர் கொண்ட குடும்பமே தற்கொலை

காவேரிப்பாக்கம், ஆக. 24— கடன் தொல்லை காரணமாக ஒரே குடும்பத்தைச் சேர்ந்த 6 பேர் விஷம் குடித்து தற்கொலை செய்து கொண்ட துயரச் சம்பவம் நடந்துள்ளது.

இதுபற்றியவிவரமாவது: வடாற்காடு மாவட்டம் வாச்சனூர் கிராமத்தைச் சேர்ந்தவர் நமச்சிவாய செட்டியார் (வயது 40) இவர் மனைவி பராசக்தி (வயது—35) மகள் சாந்தி (வயது 15) லட்சுமி (வயது7)மகன்கள் ஏழுமலை (வயது 10) சீனு (வயது 5)

கடந்த 21-ந் தேதி நமச்சிவாயத்தின் வீடு உட்புறமாக தாளிடப்பட்டிருந்ததால்அக்கம்பக்கத்திலுள்ளோர் சந்தேகப்பட்டு கதவை உடைத்துப் பார்த்ததில் நமச்சிவாயமும் அவரது குடும்பமும் இறந்து கிடந்தது தெரிய வந்தது. இவர்கள் பிணத்தின் அருகே காலி விஷ புட்டி ஒன்றும்கிடந்ததாம் இவர்கள் விஷமருந்தி தற்கொலை செய்து கொண்டதாகக் கூறப்படுகிறது.

இதுகுறித்து தகவலறிந்த வந்தவாசி போலீஸ் இன்ஸ்பெக்டர் அப்புசாமி தலைமையில் போலீசார் ஸ்தலத்திற்கு விரைந்து சென்று பிரேதங்களை கைப்பற்றி பரிசோதனைக்காக அனுப்பி வைத்தனர்.

நமச்சிவாயத்தின் வீடு அடமானம் வைக்கப்பட்டிருந்ததாகவும், மேலும் கடன் தொல்லைகள் இருந்து வந்ததாகவும் கூறப்படுகிறது. கடன் தொல்லைக் காரணமாக நமச்சிவாயமும் அவரது குடும்பமும் தற்கொலை செய்திருக்கலாம் என சந்தேகிக்கப்படுகிறது.

மோரீஸ் தேர்தல்:

## புதிய பிரதமருக்கு இந்திரா வாழ்த்து

புதுடெல்லி, ஆக. 24-- மோரீஸ் நாட்டில் நடந்ததேர்தலில் மூன்று கட்சி கூட்டணி பெரு வெற்றி பெற்றுள்ளது. இந்த கூட்டணி இந்திய ஆதரவுகொண்டதுஆகும்.

வெற்றி பெற்றுள்ள புதிய பிரதமர் அனிருத் ஜகந்நாத்திற்கு பிரதமர் இந்திரா வாழ்த்துத் தந்தி அனுப்பி இருக்கிறார்.

இந்தவெற்றியின் மூலம் இந்தியா - மோரீஸ் நட்புறவு வலுவடையும் என்று பிரதமர் இந்திரா தெரிவித்து இருக்கிறார்.

கலவரத்தின்போது

ராணுவம் செயல்பட்டதைப் பார்த்தால்

# இலங்கையில் எந்த நேரத்திலும் ராணுவப் புரட்சி ஏற்படலாம்

அமிர்தலிங்கம் பேட்டி

**சென்னை, ஆக. 24- இலங்கையில் அண்மையில் நடந்த கலவரங்களில் இலங்கை ராணுவம் செயல்பட்டவிதத்தைப் பார்க்கும்போது அங்கு எந்த நேரத்திலும் ராணுவப்புரட்சி ஏற்படலாம் என்று அமிர்தலிங்கம் கூறினார்.**

இலங்கைத்தமிழர் தலைவர் அமிர்தலிங்கம் நிருபர்களிடம் கூறியதாவது:—

இலங்கை ராணுவத்தில் கட்டுப்பாடின்மை பெரும் அளவில் வளர்ந்துள்ளது.

இப்போது இலங்கை அதிபர் ஜெயவர்த்தனே அந்த ராணுவத்தை ஏதோ ஒரு அளவில் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வந்திருப்பதாக கருதலாம்.

ஆனால் கலவரநிலவரத்தின் போது அந்த நாட்டு ராணுவம் எப்படி கட்டுப்பாடுகளை மீறி செயல்பட்டது என்பதைப் பார்க்கவேண்டும்.

இப்போது பெயருக்கு கட்டுப்பாடு என்று தோன்றினாலும் எந்த நேரத்திலும் இலங்கையில் ராணுவம் வெடித்துக் கிளம்பக்கூடும். எந்த நேரத்திலும் அங்கே ராணுவப்புரட்சி ஏற்படலாம்.

ஆகவே அங்குள்ள தமிழ் மக்களுக்கு பாதுகாப்பு முக்கியம். சர்வதேச அமைதிப்படை போன்ற அமைப்பின் பாதுகாப்பு அவசியமாகிறது.

அப்போதுதான் எந்த சங்கடத்தையும் சமாளிக்க முடியும்.

### கோஷ்டி தகராறு

இலங்கையில் ஜெயவர்த்தனே மந்திரி சபையில் மந்திரிகளுக்கிடையே கோஷ்டி தகராறு இருக்கிறது. யார் பெரியவன்? யாருக்கு செல்வாக்கு அதிகம் என்ற போட்டா போட்டி இருக்கிறது.

இலங்கை மந்திரி சிரில் மாத்யூ என்பவர் ராணுவத்தில் ஒரு கணிசமான செல்வாக்கைவைத்திருக்கிறார் அப்படிப்பட்ட ஒரு மிருக பலம் அவரிடம் இருக்கிறது.

இது தவிர வேறு சில துறைகளும் அவர் வசம் இருப்பதாக சொல்லப்படுகிறது.

ஆகவே ராணுவம்தனது கட்டுப்பாட்டுக்குள் வந்து விட்டதாக ஜெயவர்த்தனே சொன்னாலும் அவருக்கு எதிராக ஒரு மிருக பலகோஷ்டி செயல்படுவதால் எந்த நேரத்திலும் ராணுவப் புரட்சி ஏற்படலாம்.

இப்படிப்பட்ட ஜெயவர்த்தனேதான் சட்டம் ஒழுங்கைக் காப்பதாகச் சொல்கிறார். இலங்கைத் தமிழர்கள் மீது நடந்த வன்முறை வெறிதாக்குதலை தடுத்து நிறுத்த இயலாதவர்தான் அவர்.

### கலவரத்திற்கு அரசு காரணம்

அவரது சொல்லுக்கும், செயலுக்கும் இடையே பெரும் இடைவெளிஇருக்கிறது.

இப்போது அவர் சொல்லும் பேச்சு எல்லாம் உலக மக்களை முட்டாளாக நினைத்துச் சொல்கிறார்.

தமிழர்கள்மீது நடந்த தாக்குதலைத் தடுத்து நிறுத்த முடியாதவர்தான் சட்டம் ஒழுங்கை காப்பேன் என்கிறார்.

இலங்கையில் இலங்கை தமிழர்களுக்கு எதிரான ஒரு வெறி உணர்ச்சியை உருவாக்கியதற்குஇலங்கை அரசும் ஓரளவு பொறுப்பாகும்,

இலங்கையில் தமிழர் எதிர்ப்புஉணர்ச்சி வெளிப்படையான கொள்கையாகி விட்டது.

அண்மையில் நடந்த கலவரங்களில் இலங்கையில் இருக்கும் புத்தபிட்சுக்களின் பங்கும் பெரும் அளவில் இருந்தது இதுவும் தமிழர்களுக்கு பெரும் பிரச்னையாக இருந்தது.

இவ்வாறுஅமிர்தலிங்கம் நிருபர்களிடம் கூறினார்.

### தென்னக முதல்வர்களை சந்திக்கிறார்

சென்னையில் இருக்கும் இலங்கைத் தமிழர் தலைவர் அமிர்தலிங்கம் பிரதமர் இந்திராகாந்தியின் தூதர் ஜி. பார்த்தசாரதியை சந்திக்க இருக்கிறார்.

இலங்கைத் தமிழர் பிரச்னை பற்றி விளக்க மற்ற தென்னக முதல்வர்களை சந்திக்கிறார்.

நாளை திருவனந்தபுரம் சென்று கேரள முதல்வர் கருணாகரனைச் சந்தித்துப் பேசுகிறார்.

26-ம் தேதி பெங்களூர் சென்றுகர்நாடகமுதல்வர் ராமகிருஷ்ண ஹெக்டேயைச் சந்தித்துப் பேசுகிறார்.

பிறகு அங்கிருந்து ஐதராபாத் சென்று 27-ம் தேதி ஆந்திர முதல்வர் எஸ். டி. ராமராவை சந்தித்துப் பேசுகிறார்.

பிரதமர் இந்திராகாந்தியின் தூதர் ஜி. பார்த்தசாரதியை சந்திக்க இருக்கிறார்.

## இமாலயன் லாட்டரி ரூ2.02 கோடி முதல்பரிசு

சென்னை, ஆக. 24— இமாலயன் லாட்டரியின் 164வது குலுக்கலுக்கு முதல்பரிசு ரூ. 2 கோடியே 2 லட்சரூபாய் என அறிவிக்கப்பட்டுள்ளது. நவம்பர் 8-ந்தேதி குலுக்கல் நடைபெறும். மொத்தம் 6 வரிசை டிக்கெட்டுகள் வெளியிடப்படுகிறது. 2-வது பரிசு ரூ. 25 லட்சமும், 3-வது பரிசு ரூ. 10 லட்சமும் அறிவிக்கப்பட்டுள்ளது.

இது தவிர மேலும் ஏராளமான பரிசுகள் அறிவிக்கப்பட்டுள்ளன. டிக்கெட்டுகள் செப்டம்பர் 1-ந்தேதி முதல் விற்பனைக்கு கிடைக்கும் என அறிவிக்கப்பட்டுள்ளது.





புதிய அழிவு சக்தி கண்டுபிடிப்பு:

# உலகில் மனித இனத்தைப் பூண்டோடு ஒழிக்க ரூபாய் ஒரு லட்சம் போதுமாம்

மாஸ்கோ, ஆக. 24— அணு விஞ்ஞான வளர்ச்சியின் வேகம் விநாடிக்கு விநாடி உலகில் படுவேகமாக வளர்ந்து வருகிறது.

அணுசக்தியை ஆக்கப் பணிகளுக்குபயன்படுத்தும் அதே நேரத்தில் அழிவு சக்திக்கும் பயன்படுத்த ஆராய்ச்சிகள் நடைபெற்று வருகின்றன.

உலகின் மொத்த ஜனத்தொகை ஏறத்தாழ 400 கோடி என்கிறார்கள்.

இந்த 400 கோடி மனிதர்களையும் பூண்டோடு அழிக்க முடியுமா? இதற்கு செலவு என்ன ஆகும்? இதற்கும் ஆராய்ச்சி நடைபெறுகிறது.

இரண்டாவது உலக மகாயுத்தத்தில் ஒரு அணுகுண்டு ஹிரோஷிமா நாகசாகியில் விழுந்த வரலாறு இருக்கிறது.

இதில் பலலட்சம் மனித உயிர்கள் பலியாகின.

இதன் பிறகும் அழிவு ஆராய்ச்சி தொடர்கிறது. ஹைட்ரஜன் குண்டுகள் போன்ற அழிக்கும் அசுர ஆயுதங்கள்கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

அதோடு நிற்கவில்லை. இந்த ஆராய்ச்சி தொடர்கிறது. தொடர்ந்து விஞ்ஞானிகளின் பரிசோதனை ஆராய்ச்சியில் இருந்துவருகிறது.

இந்த வகையில் உலகில் உள்ள 400 கோடி மனிதர்களையும் பூண்டோடு அழிக்க செலவு என்ன ஆகும்? இதற்கு வழிமுறை என்ன என்று கிழக்கு ஜெர்மன் விஞ்ஞானி ஒருவர் ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ளார்.

இவரது பெயர் பேராசிரியர் மார்கிட் ரீட்ஸ்க். இவர் ஒரு பயங்கரமான விஷவாயுவைக் கண்டு பிடித்திருக்கிறார். அந்த செய்தியும் வெளிவந்துள்ளது.

இந்த விஞ்ஞானி என்ன சொல்லுகிறார் தெரியுமா? ஒரு மனிதனைக் கொல்ல ஒரு மில்லி கிராம் வாயுவில் 10ல் 4 பங்கு அளவு போதுமாம். ஆளைக் குளோஸ் செய்து விடலாமாம்.

இந்த வகையில் கணக்கிட்டால் இந்தவகைவாயுவைக் கொண்டு 25லட்சம் மனிதர்களைக் கொன்று குவிக்க ஒரு கிலோ வாயு போதும் என்கிறார் அவர். இதன் விலை 6 டாலர் தான் ஆகும் என்கிறார் அவர்.

இந்த வகையில் கணக்கிட்டால் உலகில் உள்ள மனிதர்கள் அனைவரையும் கொன்று குவிக்க 10 ஆயிரம் முதல் 12 ஆயிரம் டாலர் வரை தான் ஆகும் என்று கணக்கிடப்படுகிறது. இதன் இந்திய நாணய மதிப்புஒருலட்சம் ரூபாய்தான்.

உலகில் மனிதஇனத்தை ஒழித்துகட்ட ரூ. 1 லட்சம் போதும் என்ற நிலைக்கு அழிவு வளர்ச்சி விஞ்ஞான வேகம் வளர்ந்துள்ளது.

இந்த விஞ்ஞானியின் இந்தக் கண்டுபிடிப்பு சோவியத்நாட்டு பத்திரிகை ஒன்றில் வெளிவந்துள்ளது.